...ன.

...மா

இருபத்துநான்கு குருவையுரைத்த

# அவதூதசம்வாதம்.

மூலமுமுரையும்.

இம்மூலம்,

## வியாசமகாரிஷியினாலே

அருளிச்செய்யப்பட்ட பாகவதம்

இவ்வுரை செய்தவர் திருச்சிரபுரம்

## தாயுமானஸ்வாமிகள்

பரம்பரைக்குரிய அம்பலவாணன் பாலகன்

மாணிக்கராயர் எடுத்துக்கட்டி.

## அருணாசல நாயனார்

இஃது

வா. வெ. ஆதிமூலம்பிள்ளையால்

தஞ்சை "நாஷனல் அச்சுக்கூடத்தில்"
பதிப்பிக்கப்பட்டது.






ஸ்ரீகுருவேநம:

# பாகவதத்தில் அவதூதசம்வாதம்.

---

## இருபத்து நான்குகுருவையுரைத்த அத்தியாயம்.

### இதன் வரலாறு.

ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தி வைகுந்தத்திற்கெழுந்தருள எத்தனமான காலத்தில் உத்தவரென்பவர் மிகவுமனோவிதனங்கொண்டவராய்க் கண்ணனது திருவடிகளில் வணங்கி ஒடுக்கவணக்கத்துடனின்றுகொண்டு ஓய்புருஷோத்தமா சகலஜீவதயாபரா மாயாதீதவல்லபா. தேவரீர் திருவடிகளைப்பிரிந்து யானெவ்வாறுய்வேனென்று முறையிட்டபோது ஸ்வாமிதிருவுளமிரங்கி ஞானோபதேசஞ் செய்து அவ்வுபதேசம் நிலைபெறப் போதிக்குங்காலையில் வாரும்பிள்ளாய் உத்தவா உன்னறிவினையே யுனக்குக்குருவாகக்கொண்டு நற்புத்தியினாலே துற்புத்தியைசிட்சித்து நீயே நானாகவும் நானேநீயாகவும் நீயேநீயாகவுந் தெளிந்தறிகவென்று திருவாய் மலர்ந்தருள அப்போது உத்தவர் அடியேனெவ்வாறு தெளிவுபெருவேனென நமக்குப்பதிநான்

காவதுபாட்டன் எதுமகாராஜன் அரசுசெலுத்து ங்காலத்தில் நடந்த அவதூதசம்வாதமென்ஞெரு கதை யுண்டென்றதனைக்கேளன உத்தவர்க்குத் திருவாய் மலர்ந்தருளியது,

(தெத்தாத்திரையமுனிவரை)
(எது மகாராஜன் வினுதல்.)

தீதிலன் மகிழுந்தெத்தாத் திரையனென் றுலக மெல்லாம், ஓதவதூதவேடத் தொருவனையெது முன்கண்டு, நீதிசெய்யறம்பொன்காம நினைந்திலே சிறிதுமின்பம்,எதினிலடைகின்ருய்நீ யெனமுனி யிசைக்கலுற்ருன்.

(இதன்பொருள்.)

| | |
|---|---|
| தீதிலன் | ... குற்றமில்லாதவனுகி |
| மகிழும் | ... மகிக்ஷியையடையும் |
| தெத்தாத்திரைய னென் | தெத்தாத்திரையமுனிவ |
| று | ... னென்று |
| உலகமெல்லாம் | ... பெரியோர்களெல்லாம் |
| ஓதும் | ... சொல்லுகின்ற |
| அவதூதவேடத்து | ... திகம்பரவுருவத்தினையுடைய |
| ஒருவனை | ... ஒருமகாபுருஷனை |
| எதுமுன் கண்டு | ... எதுமகாராஜன் தனக்கு முன்பாகக்கண்டு |

நீதிசெய்யறம் ... வழுவாதுசெய்யும் ஆசிரமதருமத்தையும்
பொன்காமம் ... பொன் முதலியவற்றிற் செலுத்தும் ஆசைமூன்றினையும்
சிறிதும்நினைந்திலை ... கொஞ்சமேனும்நினைக்கவில்லை
இன்பம்நீ ... பேரின்பத்தைநீர்
ஏதினிலடைகின்றாயென எதினாற் பெற்றுக்கொண்டீரொன்றுகேட்க
முனியிசைக்கலுற்றார் ... தெத்தாத்திரையமுனிவர்சொல்லுகின்றார்.

(அவதாரிகை.) (எ-று)

தாமடைந்த பேரானந்த மிவற்றால்
பெற்றதெனத், தொகுத்துக்கூறியது.

தரைபுனல்கனல்கால்வானந்தபனன் வெண்டிங்கள்வாரி, வரையுறையரவுமான்கான் வருகரிபதங்கமீன, முரலளிகணையெய்கின்றோன் மொழிதருங்குமரிதேனீ, யுரைதருபுறவு தாசியூன் கவரன்றினகம்

(இதன்பொருள்)

தரை ... பூமி
புனல் ... நீர்

| | |
|---|---|
| கனல் | ... நெருப்பு |
| கால் | ... வாயு |
| வானம் | ... ஆகாயம் |
| தபனன் | ... சூரியன் |
| வெண்டிங்கள் | ... சந்திரன் |
| வாரி | ... சமுத்திரம் |
| வளையுறையரவு | ... மலைப்பாம்பு |
| மான் | ... மான் |
| கான்வருகரி | ... காட்டானை |
| பதங்கம் | ... விட்டிற்பறவை |
| மீனம் | ... மீன் |
| முரலளி | ... வண்டு |
| கணையெய்கின்றோன் | ... வேடன் |
| மொழிதருங்குமரி | ... கன்னிகைப்பெண் |
| தேனீ | ... தேன்வண்டு |
| உளைதருபுறவு | ... புறா |
| தாசி | ... விலைமாது [வை |
| ஊன்கவரன்றில் | ... தசைக வருமோர் பற |
| நாகம் | ... பாம்பு. (எ-று) உ |

(இதுவுமது)

உறைந்த நூற்சிலமபிமைந்தருதுவண்டெடுத்த கீடஞ், சிறந்தனவிவை நாலாறுஞ்சிந்தையிற்குரு வென்றாக்கி, மறந்தருமவைகடீதாமற்றவை நலஞ

மென்றிங், கறிந்தனனின்ப முற்றேனவ்வகையர சகேண்மோ.

(இதன்பொள்)

| | |
|---|---|
| உறைந்த நூற்சிலம்பி ... | சிலந்திப்பூச்சி |
| மைந்தர் ... | குழந்தை |
| ஊதுவண் டெடுத்தகீடம் | ஒலித்தலைச்செய்யும் வண்டெடுத்தபுழு |
| சிறந்தன விவைகளாறும் | சிறப்பினையுடைய இவ் விருபத்து நான்கையுஞ் |
| சிந்தையிற் குருவென்று க்கி ... | எனது கருத்துக்குட் குருவாகக்கொண்டு |
| மறந்தரு மவைகடீதாம் | பொல்லாங்கைத் தருகின்றவைடீ தாமென்றும் |
| மற்றவைநலனுமென்றும் | ஒழிந்த தீங்கில்லாதவை கணன்கா மென்றும் |
| இங்கறிந்தனன் ... | இவையிடமாக அறிந்து |
| இன்பமுற்றேன் ... | பேரின்பத்தைப் பெற்றேன் |
| அவ்வகை ... | யான்பெற்றவகையை |
| அரசகேண்மோ ... | ஏதுமாராஜனேகேளும். |

(இதன்குற்பரியம்) (எ-று)

பூமிமுதற்புழுவீருகச்சொல்லிய விருபத்துநான்கினுமுள்ள நற்குணங்களே குருவாயினவென்

றும், அவைகளாற்முனின்பம் பெற்றவகையையு
ணாக்குதுமென்றுஞ் சொல்லியதாம்.

(அவதாரிகை)

பூமியினது குணத்தால்.
அறிகின்றவை இவையெனல்.

பரிவில்வெட்டினுங்கல்லினும் பயன்பொறுத்த
ளித்தும, புரியுநல்லகைமாறெதிர் பொருந்திடாத
சலத், தருவிரீரடவிக்கனி முதலியவளித்து, மிரு
திறத்தையு மெனக்கறிவித்ததித்தனாயே.

(இதன் பொருள்,)

| | |
|---|---|
| பரிவில் வெட்டினும் | ... அன்பில்லாது வெட்டிப்பிளந்தாலும் |
| கல்லினும்பொறுத்து | ... தோணடினாலுஞ் சகித்துக்கொண்டு |
| பயனளித்தும் | ... தன்னாலாகிய பலன்களைக்கொடுத்தும் |
| அசலத்தருவிரீர் | ... மலைகளினின்றுவராநின்ற அருவிசலங்களாலும் |
| அடவிக்கனிமுதலிய | ... வனங்களிலுண்டாகின்றகனி முதலிய வற்றாலும் [ம்பாது |
| எதிர்பொருந்திடாது | ... பதிலுபகாரத்தை விரு |
| அளித்தும் | ... இரட்சித்தும் |

நல்லவகைமாறு ... நன்மையான வுபகாரங்களை
புரியும் ... செய்துகொண்டு வரும்
இருதிறத்தையும் ... தனக்குப்பிறர் செய்யுந்தீங்கைச்சகித்தலும் அவர்களுக்குதவலு மாகிய இவ்விரண்டு குணத்தையும்
எனக்கறிவித்தது ... எமக்கறியச்செய்தது
இத்தரையே ... இந்தபூமி எ-று)
(ஏகாரம் அசைநிலை)

(இதன்றாற்பரியம்.)

தனக்குச் செய்கின்ற பொல்லாங்குகளையெல்லாஞ் சகித்துக்கோடலும் தான்கை மாறுவேண்டாது பிறர்க்குப்பயன் படுதலும் ஆகிய விவ்விரண்டு குணத்தையும் பூமியாலடைந்தேனென்பதாம் (ச)

மருதநிலம்-குறிஞ்சிநிலம்-முல்லை-நிலம் பயன்படுமாறு கூறியது.

(அவதாரிகை)

நீரினது குணத்ாலறிகின்றவை)

(இவையெனல்)

களிகொளும் முருகினைக்கினுங் காண்கினுநலஞ்சோர், தொளிகொளும் பெயர்வழுத்தினு மன்ன

வருளத்தை, யளிகொளும் புனிதம்பெறவாக்கலு மருந்தண், டெளிவுமப்புவினிடத்தினின் றறிந்தன ன்றெரிக்கில்.

(இதன் பொருள்)

| | |
|---|---|
| நளிகொளும் | ... குளிர்ச்சியைக் கொண் டிருக்கும் |
| உருநினைக்கினும் | ... வடிவத்தினைச் சிந்திக்கி னும் |
| காண்கினும் | ... தரிசிக்கினும் |
| நலஞ்சேர்ந்து | ... நன்மைகளெல்லாமொ ன்றாகி [தை |
| ஒளிகொளும் பெயர் | ... பிரகாசம்பெற்ற நாமத |
| வழுத்தினும் | ... துதிக்கினும் |
| அன்னவருளத்தை | ... அவர்களதுமனதை |
| அளிகொளும் | ... அன்பினைக் கொண்டி ராநின்ற |
| புனிதம்பெறவாக்கலும்.. | பரிசுத்தத்தை யடைய ச்செய்தலும் |
| அருந்தண் | ... அரியகுளிர்ச்சி யினை யும் |
| தெளிவும் | ... தெளிவையும் |
| அப்புவினிடத்தினின்று .. | நீரினிடத்திலேயிருந்து |
| அறிந்தனன் | ... அறிந்துகொண்டனன் |
| தெரிக்கில் | ... சொல்லுமிடத்து(எ-று |

(இதன் ருற்பரியம்)

தியானித்தவர்-தரிசித்தவர்-துதித்தவர்- இவர்களுடைய உட்புறம்பைச் சுத்தஞ்செய்தும் மலினந்தாக்காது அந்நீர் தெளிவுற்றிருத்தல்போல் தன்னையொருவர் நினைப்பினும் காண்கினும் துதிக்கினும் அவாபுனிதராகுவது மன்றித்தானுமங்கிலேயினின்றுங் கெடாததென்பதாம். (ரு)

(அவதாரிகை)

அக்கினியினுற்பெறுகின்றவை யிவையெனல்.
இருந்திராகமோடியம்பரும் வெறுப்பறவெறிந்து
பொருந்துகின்றனயாவையும் புசிப்பதுமெவரும்
விரைந்துவந்தணுகாவகைவீற்றிருப்பதுவுந்
திருந்துகின்ற நற்காந்தியும் பெற்றனன்றீயின்.

(இதன் பொருள்)

| | |
|---|---|
| இருந்து | ... இருந்தபடியே |
| இராகமோடு | ... விருப்பத்துடனே |
| இயம்பரும் | ... சொல்லுதற்கரிய |
| வெறுப்பும் | ... வேண்டாமையும் |
| அறவெறிந்து | ... முற்றிலுமொழித்து |
| பொருந்துகின்றன | ... தனக்குக்கிடைக்கின்றவை |
| யாவையும் | ... எல்லாவற்றையும் |
| புசிப்பதும் | ... உன்பதும் |

எவரும்விளாந்துவந்து ... எத்தன்மையுடையோர்களுந்தாராளமாகவந்து
அணுகாவகை ... நெருங்காதபடிக்கு [ம்
வீற்றிருப்பதுவும் ... பெருமையுடனிருப்பது
திருந்துகின்றநற்காந்தியும் பிரகாசிக்கின்ற நல்ல ஒளியும்
பெற்றனன் ... யானடைந்தனன்
தீயின் ... அக்கினியினால். (எ-று)

(இதன்றாற்பரியம்)

இருந்தவிடத்திலெவை கிடைக்கினும்,
விரும்புவெறுப்பு மின்றிதலும்,
ஒருகூட்டமுமின்றித்தன்மயமாகவிருக்கின்றதும்
அக்கினியாற்பெற்றதென்பதாம். (சா)

(அவதாரிகை)

(வாயுவினாற் பெறுகின்றவை யிவையெனல்)

வளைந்த காத லெவ்விருப்படைந்தானெனவரினு ஞ்,தெளிந்தயோகியருயிர்க்கவையில்லெனத்தெளி ந்தேன்,விளைந்தவாசமுந்துர்க்கந்தமுமேவி, யளை ந்துவந்துமக்குணம்பெறுவதிலனென்றறிதேன்.

(இதன்பொருள்)

(அன்வயம்)

விளைந்தவாசமும் ... பலபொருள்களினின்றுமுண்டாகின்றநர்க் கந்தத்தினும்

| | |
|---|---|
| விளம்புதுர்க்கந்தமும் | ... வெகுவிதமாய் சொல்லுகின்ற துர்க்கந்தத்தினும். |
| மேவியளைந்துவந்தும் | ... பொருந்தும்படி யாகக் கலந்து வந்தாலும், |
| அக்குணம்பெறு | ... அந்தக் குணத் தைப் பொருந்ாத |
| அநிலனென்று | ... வாயுவென்று |
| அறிந்தேன் | ... அறிந்துகொண்டனன் |

(அதுபோலவே)

| | |
|---|---|
| வளைந்த | ... சூழ்ந்த |
| காதல் | ... இச்சையால் |
| எவ்விருப்படைந்தானென | எப்பொருளிலு மாசையுடையவரைப் போலவே |
| வரினும் | ... வந்தாலும் |
| தெளிந்தயோகியர் | ... அறிவு மயமா யிருக்கின்ற யோகியரது |
| உயிர்க்கு | ஆத்மாவுக்கும் |
| அவையில்லென | ... அவ்வாசை யில்லையென்று |
| தெரிந்தேன் | ... எனதறிவிற்குப்புலப்படத்தெளிவுற்றனன். எ-று |

(இதன்றாற்பரியம்)

நர்க்கந்த தூர்க்கந்தங்களிற் கலந்துவரினும், அக்குணம்வாயுக்கின்மைபோல்-அறிவுடையோ ரெவற்றிற் கலந்திருப்பினும், அவையவனைப்பற்றாதென வறிந்தே னென்பதாம். (எ)

(அவதாரிகை.)

(ஆகாயத்தாலறிகின்றவை யிவையெனல்)

கண்ணகன்றிடு மிடத்துள்வான் கடத்துள்வானெனவான், எண்ணகின்றன போகவொன்றாயியைந்ததனாற், பண்ணுகின்றதன்மாயையிற் பற்பலபடைப்பாய், நண்ணுகின்றதும் பிரமமொன்றென்று நன்கறிந்தேன்.

(இதன்பொருள்)

| | |
|---|---|
| கண்ணகன்றிடும் | ... இடமகன்றிரானின்ற |
| இடத்துள் | ... இடங்களெல்லா நிறைந்த |
| வான் | ... மகா ஆகாயமும் |
| கடத்துள்வான் | ... குடத்துளிருக்கின்ற கடாகாயமும் |
| என | ... என்று |
| வான் | ... ஆகாயங்கள் |
| எண்ணகின்றன | ... ஒன்றிரண்டென்றெண்ணகின்றன |

| | |
|---|---|
| போக | ... அக்கடம் நசித்துப்போமாயின் |
| ஒன்ருய் | ... அவையேகமாய் |
| இயைந்ததனுற் | ... பொருந்திய படியால் அதுவே |
| பிரமம் | ... சைதன்யம் |
| பண்ணுகின்றன | ... எல்லாவற்றையும் உண்டாக்குகின்ற [லே |
| தன்மாயையின் | ... தனது மாயாசத்திகளா |
| பற்பலபடைப்பாய் | ... பலபல சிருட்டிகளாகியும் |
| நண்ணுகின்றதும் | ... அவற்றுட் பொருந்தியிருக்கின்றதும் [றே |
| ஒன்றென்று | ... அப்பிரம மொன்றென் |
| நன்கறிந்தேன் | ... யான் நன்ரு யறிந்து கொண்டனன். (எ-று) |

(இதன்ருற்பரியம்)

கடம்நசிக்கக்கடாகாயமகா காயமானவாறுபோல மாயாதேகம் நசிக்கில் கூடஸ்தனும் பிரமமுமேக மாவதை ஆகாயத்தா லறிந்தனனென்பதாம். (அ)

இதுவுமது.

உற்றவுருவிடமின்றெனவறையும்வா னென்ருற்
குறைவுருவகைகண்டதிற்கூறு மொன்ருலும்

மறைவுறாதொருகுறையுமன்றது மற்றெங்கும்
நிறைவுறாதவைநிகர்த்தென நினைத்தனன் பிரமம்.

(இதன்பொருள்)

உறைவுறாவிடமின்றென ... வியாபியாத விடமில்லையென்னும்படியாய்
உறையும் ... இருக்கின்ற
வான் ... ஆகாயம்
ஒன்றால் ... ஒன்றினாலே
குறைவுறாவகைகண்டு ... கெடுதலில்லாத வழியையறிந்து
அதிற்கூறுமென்றாலும் ... அவ்வாகாயத்திற்றோன்றுமெனச் சொல்லியபூதங்களொன்றினாலும்
பிரமம் ... பிரமமும்
மறைவுறாது ... மறைவுபடாமலும்
ஒருகுறையுன்றது ... ஒரு ஈனமுமடையாமலும்
எங்கும் ... எவ்விடத்தும் [ம்
நிறைவுறாது ... பூரணங் குறையாமலு
அவை ... அவ்வாகாயத்தை
நிகர்த்தென ... ஒத்ததென்று
நினைத்தனன். ... கருத்துட் கொண்டனன் (எ-று)

(மற்று-அசை-நிலே.)

(இதன் ருற்பரியம்)

எங்கும் பரிபூரணமாய் ஒன்ருலுமறைவுபடாத சைதன்னியத்தை ஆகாயமறிவிக்க அறிந்தேனென்பதாம்

இவ்விரண்டு செய்யுட்களாலும் ஆகாயத்தினியல் புரைக்கப்பட்டதெனவறிக

(அவதாரிகை)

(கதிரவனுலறிகின்றவை யிவையெனல்.)

அருவமாமறிவானவனுக்கைகள் பலவும், ஒருவனுகியேயுறைகுவனென்பதையுணர்ந்தேன், பரிதிவானவனொருவனேயாய்ப்பலகுடத்தின், மருவுநீரதொறு நிழல்பலவா யுறன்மதித்தே

(இதன்பொருள்)

(அன்வயம்.)

| | |
|---|---|
| பரிதிவானவன் | ... சூரியனுனவன் |
| ஒருவனேயாய் | ... ஒருவனேயாகி |
| பலகுடத்தின் | ... அநேகங் குடங்களிலே |
| மருவநீர்தொறும் | ... இருக்கின்றஜலங்கடோறும். |
| நிழல்பலவாயுறல் | ... விம்பம்பலவாயிருக்கின்றதை |

| | |
|---|---|
| மதித்து | ... இத்தன்மைத் தென்று நினைத்து |
| அருவமாம் | ... அரூபமாகியும் |
| அறிவானவன் | ... அறிவுமயமாகி யிராநின்றசைதன்னியம் |
| ஒருவனுகியே | ... ஒருவனுயிருந்தே |
| யாக்கைகள்பலவும் | ... உடல்கள் பலவற்றிலும் |
| உறைகுவன் | ... வசித்திருப்பன் |
| என்பதை | ... என்கின்றதை |
| உணர்ந்தேன் | ... அறிந்தனன் |

(இதன்ருற்பரியம்)

சூரியனெருவனுயிருந்தும் பலகுடத்துளிருக்கின்ற நீர்கடோறும் பலவிம்பமாகப் பிரகாசிக்கின்றதுபோலவே, சைதன்னியமும் உடல்கடோருமிருந்து விளங்குகின்றதென்பதை சூரியனுலறிந்ததென்பதாம்.

(அவதாரிதை)

(சந்திரனுலறிகின்றவை யிவையெனல்)

திங்கணுடொரும் வளர்தலுந் தேய்தலுந் தெரிக்கிலங்கண்மா நிலம்விளங்கும்வெண்கதிர்க்குணமதனுற், றங்குமோரறுவகை விகாரங்களுந் தமியே, னிங்குநாடினனுடற்கலாலுயிர்க்கிலையெனவே.

(இதன்பொருள்)

| | |
|---|---|
| திங்கள் | ... சந்திரனானவன் |
| நாள்தொறும் | ... மாதங்களெல்லாம் |
| வளர்தலும் | ... விருத்தியடைதலையும் |
| தேய்தலும் | ... குறைதலையும் |
| தெரிக்கில் | ... தெரிவிக்குமிடத்து [ம் |
| அங்கண் மாநிலம் | ... அகன்றபுவி களெல்லா |
| விளக்கும் | ... பிரகாசிக்கும் |
| வெண்கதிர்க்குணமதனால் | வெள்ளிய கிரணங்களின் குணமாதலால் |
| தங்கும் | ... உடலிலிருக்கும் |
| ஓராறுவகை விகாரங்களும் | காமாதி யாறு பகைகளும் |
| உடற்கலால் | ... அவ்வுடலுக்கே யன்றி |
| உயிர்க்கிலையென | ... ஆத்மாவுக்கில்லை யென்று |
| இங்குநாடினன் | ... இவைகளா லறிந்தனன் |

(இதன்றுற்பரியம்.) (எ-று)

சந்திரன் நாடோறும் விருத்தியும் க்ஷயமுமடைந்தபோதிலும், தனது பிரகாசத்திற்குக்குறைவில்லாததுபோல, காமம் - குரோதம் - உலோபம் மோகம் - மதம் - மாச்சரியம் என்ற அறுபகையும் உடலுக்கேயன்றி உயிர்க்கில்லை யென்பதை மதுயாலுணர்ந்தன னென்பதாம். (௰௧)

(அவதாரிகை)

(இதுவுமது)

விளங்குமெய்ப்பொருள் யாக்கை மேவினுமதின் குணங்க, ளுளங்கொடெண்ணிலப் பொருட்கிலையென்பதுமோர்ந்தேன், களங்கமென்பது மதிக்கிலைகருதுமக்களங்கம், வளங்கொள் பூமியின் சாயையென்பாரதை மதித்தேன்.

(இதன் பொருள்)

| | |
|---|---|
| விளங்கும் | ... பிரகாசியாநின்ற |
| மெய்ப்பொருள் | ... சைதன்னியம் |
| யாக்கை | ... உடல்களிலே |
| மேவினும் | ... இருப்பினும் [களை |
| அதின் குணங்கள் | ... அவ்வுடலினது குணங் |
| உளங்கொடெண்ணில் | ... யோசித்துப்பார்க்கில் |
| அப்பொருட்கிலையென்பதும் | அக்குணமவ்வாத்மாவுக்கில்லையென்பதையும் |
| ஓர்ந்தேன் | ... ஆராய்ந்தறிந்தனன் |

(அஃதெவ்வாறெனில்)

| | |
|---|---|
| மதிக்கு | ... சந்திரனுக்கு |
| களங்கமென்பது | ... கறையென்பது |
| இலை | ... இல்லை |
| கருதுமக்களங்கம் | ... யாவராலுஞ் சொல்லப்படும் களங்கமோவென்றால் |

வளங்கொள் ... வளப்பத்தைக்கொண்டி ராநின்ற
பூமியின் ... பூமியினது
சாயையென்பார் ... சான்ஞேர்சாய லென் றுசொல்லுவர்
அதைமதித்தேன் ... அதை அறிந்துகொண் டேன். (எ-று)

(இதன்ருற்பரியம்)

சந்திரனைப்போலும் ஆத்மா உலகத்தைப் போலும் யாக்கை அவ்வுலகச்சாயைபோலும் உடலுக்குண்டாகிய காமாதிகள் ஆகையால்உட லுக்குண்டாகிய துற்குணம் ஆத்மாவுக் கில்லையெ ன்பதாம். (௰௨)

(அவதாரிகை)

(சமுத்திரத்தாலறிகின்றவையிவையெனல்.)

நிறைவினுடொறுங்குறைவறவமைந்தயனீர்வந் தறையுநீடிளாகூடினு மதின்குணமடையா, துறை யும் வாரிகெம்பீரமுற்றென்பதை யுணர்ந்திங், கி றைவயானுமக்குணங்களையுவந்தியைந்தனனல்.

(இதன்பொருள்)

வாரி ... சமுத்திரம்
நிறைவில் ... பெருக்கத்தினின்றும்
நாடொறும் ... எப்போதும்

| | |
|---|---|
| குறைவறவமைந்து | ... குறைவுபடாதிருந்து |
| அயல்னீர்வந்து | ... ஆற்றுநீர்முதலிய அன்னியஜலம்வந்து |
| அறையுநீடினைகூடினும்.. | ஒலிக்கின்றவக்கடலிற் கலப்பினும் |
| அதின்குணமடையா | ... அவ்வயனீரினது குணத்தைத்தான்பெருது |
| கெம்பீரமுற்றுறையு மென்பதை | மெ ஆழமும் நிறைவும்பொருந்தியிருக்கு மென்டதை |
| உணர்ந்து | ... அறிந்து |
| இங்கிறைவ | ... இவ்வுலகத்திற் கிறைவனாகிய யெதுமகா ராஜனே |
| யானுமக்குணங்களை | ... யானுமந்தப் பண்புக்களை |
| உவந்தியைந்தனன் | ... மகிழ்ச்சியுடன் பொருந்தினன் |
| ஆல் | ... அசைநிலை (எ-று) |

(இதன்ருற்பரியம்)

சமுத்திரந்தனது நிறைவிற் குறைவில்லாமலும் அன்னியஜலங்கூடினுமதின் குணத்தைதானடையாமலும் தமது பெருமை குறையாமலு மிருக்கின்றமை யறிந்து அதுபோலவே யானுமெனது பூரணங்குறையாமலும் தேகாதிபிரபஞ்சஞ் சேரினு

மவற்றின்குணம் பெருமலும் தன்மயமாயிருக்கி ன்றதன்மையைப்பெற்றே னென்பதாம். (மங)

(அவதாரிகை)

(மலைப்பாம்பினலறிகின்றவை யிவையெனல்.)

உற்றவுற்றவைமுயற்சியின் வருந்திடாதுண்ணுங்
குற்றமற்றநீண்மலையரா வென்பதைக்குறித்திங்
கற்றமற்றநல்லறிவினர்க்கிது வழகென்னப் [ய்.
பெற்றபெற்றன முயற்சியற்றருந்தினன்பெரியோ

(இதன்பொருள்)

குற்றமற்ற ... பிழையில்லாத [து
நீண்மலையரா ... நீண்டமலைப்பாம்பான
முயற்சியின்வருந்திடாது முயற்சிசெய்துவருந்தாமல்
உற்றவுற்றவை ... தனதருகில்வருகின்றவவற்றையே
உண்ணும் ... புசிக்கும் [ருதி
என்பதைக்குறித்து ... என்று சொல்வதைக்க
இங்கு ... இவ்வுலகத்தின்கண்
அற்ற மற்ற நல்லறிவினர்க்கு ... அச்சமில்லாத பேரறிவுடையோர்க்கு
இதுவழகென்ன ... இவ்வாறிருத்தலழ கென்று. [யே.
பெற்றபெற்றன ... யான்பெற்றவள வினை

(அவதாரிகை)
(இதுவுமது)

விளங்குமெய்ப்பொருள் யாக்கை மேவினுமதின் குணங்க, ளுளங்கொடெண்ணிலப் பொருட்கிலேயென்பதுமோர்ந்தேன், களங்கமென்பது மதிக்கிலேகருதுமக்களங்கம், வளங்கொள் பூமியின் சாயையென்பாரதை மதித்தேன்.

(இதன் பொருள்)

| | |
|---|---|
| விளங்கும் | ... பிரகாசியாநின்ற |
| மெய்ப்பொருள் | ... சைதன்னியம் |
| யாக்கை | ... உடல்களிலே |
| மேவினும் | ... இருப்பினும் |
| அதின் குணங்கள் | ... அவ்வுடலினது குணங்களை |
| உளங்கொடெண்ணில் | ... யோசித்துப்பார்க்கில் |
| அப்பொருட்கிலேயென்பதும் | ... அக்குணமவ்வாத்மாவுக்கில்லேயென்பதையும் |
| ஓர்ந்தேன் | ... ஆராய்ந்தறிந்தனன் |

(அஃதெவ்வாறெனில்)

| | |
|---|---|
| மதிக்கு | ... சந்திரனுக்கு |
| களங்கமென்பது | ... கறையென்பது |
| இலே | ... இல்லே |
| கருதுமக்களங்கம் | ... யாவராலுஞ் சொல்லப்படும் களங்கமோவென்றால் |

| | |
|---|---|
| வளங்கொள் | ... வளப்பத்தைக்கொண்டிராநின்ற |
| பூமியின் | ... பூமியினது |
| சாயையென்பார் | ... சான்றோர்சாய லென்றுசொல்லுவர் |
| அதைமதித்தேன் | ... அதை அறிந்துகொண்டேன். (எ-று) |

(இதன்ருற்பரியம்)

சந்திரனைப்போலும் ஆத்மா உலகத்தைப் போலும் யாக்கை அவ்வுலகச் சாயைபோலும் உடலுக்குண்டாகிய காமாதிகள் ஆகையால்உடலுக்குண்டாகிய துற்குணம் ஆத்மாவுக் கில்லையென்பதாம். (൰உ)

(அவதாரிகை)

(சமுத்திரத்தாலறிகின்றவையிவையெனல்.)

நிறைவினுடொறுங்குறைவறவமைந்தயனீர்வந்தறையுநீடினாகூடினு மதின் குணமடையா, துறையும் வாரிகெம்பீரமுற்றென்பதை யுணர்ந்திங், கிறைவயானுமக்குணங்களையுவந்தியைந்தனனல்.

(இதன்பொருள்)

| | |
|---|---|
| வாரி | ... சமுத்திரம் |
| நிறைவில் | ... பெருக்கத்தினின்றும் |
| நாடொறும் | ... எப்போதும் |

| | |
|---|---|
| குறைவறவமைந்து | ... குறைவுபடாதிருந்து |
| அயல்னீர்வந்து | ... ஆற்றுநீர்முதலிய அன்னியஜலம்வந்து |
| அறையுநீடிணாகூடினும்.. | ஒலிக்கின்றவக்கடலிற் கலப்பினும் |
| அதின் குணமடையா | ... அவ்வயனீரினது குணத்தைத்தான்பெருது |
| கெம்பீரமுற்றுறையு மென்பதை | ஆழமும் நிறைவும்பொருந்தியிருக்கு மென்பதை |
| உணர்ந்து | ... அறிந்து |
| இங்கிறைவ | ... இவ்வுலகத்திற் கிறைவனுகிய யெதுமகா ராஜனே [ளே |
| யானுமக்குணங்களே | ... யானுமந்தப் பண்புக்க |
| உவந்தியைந்தனன் | ... மகிழ்சியுடன் பொருந்தினன் |
| ஆல் | ... அசைநிலை (எ-று) |

(இதன் ருற்பரியம்)

சமுத்திரந்தனதுநிறைவிற் குறைவில்லாமலும் அன்னியஜலங்கூடினுமதின் குணத்தைதானடையாமலும் தமது பெருமை குறையாமலு மிருக்கின்றமை யறிந்து அதுபோலவே யானுமெனது பூரணங்குறையாமலும் தேகாதிபிரபஞ்சஞ் சேரினு

மவற்றின் குணம் பெருமலும் தன்மயமாயிருக்கி ன்றதன்மையைப்பெற்றே னென்பதாம். (யங)

(அவதாரிகை)

(மலைப்பாம்பினலறிகின்றவை யிவையெனல்.)

உற்றவுற்றவைமுயற்சியின் வருந்திடாதுண்ணுங்
குற்றமற்றநீண்மலையராவென்பதைக்குறித்திங்
கற்றமற்றநல்லறிவினர்க்கிது வழகென்னப் [ய்.
பெற்றபெற்றன முயற்சியற்றருந்தினன்பெரியோ

(இதன்பொருள்)

| | |
|---|---|
| குற்றமற்ற | ... பிழையில்லாத [து |
| நீண்மலையரா | ... நீண்டமலைப்பாம்பான |
| முயற்சியின்வருந்திடாது | முயற்சிசெய்துவருந்தாமல் |
| உற்றவுற்றவை | ... தனதருகில்வருகின்றவவற்றையே |
| உண்ணும் | ... புசிக்கும் [ருதி |
| என்பதைக்குறித்து | ... என்று சொல்வதைக்க |
| இங்கு | ... இவ்வுலகத்தின்கண் |
| அற்ற மற்ற நல்லறிவினர்க்கு | அச்சமில்லாத பேரறிவு ... டையோர்க்கு |
| இதுவழகென்ன | ... இவ்வாறிருத்தலழ கென்று. [யே. |
| பெற்றபெற்றன | ... யான்பெற்றவள வினை |

முயற்சியற்று ... முயற்சியின்றி.
அருந்தினன் ... புசிக்கின்றேன்.
பெரியோய் ... மேன்மையுடையவரச
னே. (எ-று)

(இதன்முற்பரியம்.)

மலைப்பாம்பானது-தான்முயற்சியால் வருந் தாது-இருந்தவிடத்திற்றானே-தனக்குக்கிடைத்த வற்றைப்புசித்தலும் கிட்டாதபோது சும்மாவிருத் தலும்போல யானுங்கிடைத்தால், புசித்தலுங்கி டையாவிட்டால் சும்மாவிருத்தலும் பெற்றேனெ ன்பதாம். (யச)

(இதனை அஜகராவஸ்தை யென்பர்)

(அவதாரிகை.)

( சுரோத்திரத்தாற் கேட்டைந்தமானினாற் )
( பெற்றவையிவையெனல் )

மடந்தையர் மொழியுங்கானமுங்கேட்டு மன்ன வன்மகன் முலைமணந்தான், கடந்திரிகலையின் கோடுபெற்றுயர்ந்தகருதருந்தவ னெனக்கேட்டும், மடந்திகழ்மதிமான்வேட்டுவன் கானம்பகர் செவி மடுத்தவன்வலைமேற், கிடந்தனகண்டு வெவ்விசை கேளேன் கேட்பத நாம கீர்த்தனமே.

(இதன்பொருள்) (அன்வயம்.)

கடந்திரி ... கானகத்திற்றிரிகின்ற

| | |
|---|---|
| கலையின் | ... கலைமானினது [ந்த |
| கோடுபெற்றுயர்ந்த | ... கொம்பினைப் பெற்றுயர் |
| கருதருந்தவன் | ... நினைத்தற்கரிய தவத்தினையுடைய கலைக்கோட்டுமா முனிவன் |
| மடந்தையர் | ... பொதுமாதர்களினது |
| மொழியும் | ... இன்சொல்லினையும் |
| கானமும் | ... சங்கீதங்களையும் |
| கேட்டு | ... கேட்டு [ரசனது |
| மன்னவன் | ... உரோமபதனென்னுமர |
| மகண்முலை மணந்தானென | குமரியின் குசத்தைப் பொருந்த விவாகஞ்செய்தானென |
| கேட்டும் | கேள்விப்பட்டும் |
| மடந்திகழ் மதிமான் | ... அறிவின்மைமிகுந்த புத்தியினையுடைய மானனது |
| வேட்டுவன் | ... வேடன் |
| பகர்கானம் | ... கூவுகின்ற இசையை |
| செவிமடுத்து | ... காதினிடமாய்கேட்டு |
| அவன்வலைமேல் | ... அவன்வைத்த கண்ணிக்குள்ளாக |
| கிடந்தனகண்டும் | ... சிக்கிக்கிடக்கின்றதைப் பார்த்துமிருக்கின்றயான் |

வெவ்விசைகேளேன் ... கொடியகானங் களைக் கேளேன்
கேட்பது ஆயின்கேட்கின்றதெது வெனில்
அநாமகீர்த்தனமே ... பிரமத்தின் கீர்த்தனங் களேயாம் (எ-று)

(இதன் ருற்பரியம்.)

சத்தயிந்திரியத்தினுற் கலைக்கோட்டு மகாமுனி வரும்- மானும்- கெடுதியடைந்தமை நோக்கிச்சத் தகானங்களை நீக்கி வேதாந்த சிரவணங்களைக்கொ ண்டேனென்பதாம். (ருரு)

(அவதாரிகை.)
(பரிசேந்திரியத்தாற்கேடடைந்த.)
(யானையினுல றிந்ததிதுவெனல்.)

துதிதருவயவர்படுகுழி செலுத்துந்துகளறு பிடி யையுள்ளுவந்து மதகரிதழுவிவயவர் கைவசமாய் வயங்குதல் கண்டுமெட்டொழுகுந் ததைமலர்க்குழ லார்தன கிரிதழுவித் தணப்பரி தாய்மதன்வசமாய் விதலையின்மன மா மயக்குறுமென்ன விடுத்தனன் புணர்ச்சிமற்றன்றே.

(இதன்பொருள்)

துதிதருவயவர் ... புகழினைத்தரும் யானை ப்பாகர்

| | | |
|---|---|---|
| படுகுழி | ... | இழிந்தேறும்பள்ளத்தில் |
| செலுத்தும் | ... | விட்டிருக்கின்ற [யை |
| துகளறுபிடியை | ... | குற்றமற்ற பெண்யானை |
| உள்ளுவந்து | ... | மனமகிழ்ச்சியுடன் |
| மதகரிதழுவ | ... | மதம்பொழியும் ஆணை போய்தழுவ |
| வயவர்கைவசமாய் | ... | பாகர்கைவசப்பட்டு [து |
| வயங்குதல்கண்டு | ... | நடக்கின்றதைப் பார்த் |
| மட்டொழுகும் | ... | தேனொழுகுகின்ற |
| ததைமலர்க்குழலார் | ... | மலரையணிந்த நெருங்கியகூந்தலை யுடையபெண்கள் [ழுவி |
| தனகிரிதழுவி | ... | தனமாகியமலை களைத்த |
| தணப்பரிதாய் | ... | நீங்கற்கரிதாகி [ட்டு |
| மதன்வசமாய் | ... | மன்மதவேடன் வசப்ப |
| விதலையின்மனம் | ... | நடுக்கத்தினன் மனமானது |
| மாமயக்குறுமென்ன | ... | மிகுதியு மயக்கத்தைப் பொருந்துமென்று |
| விடுத்தனன் | ... | நீக்கினன் |
| புணர்ச்சி | ... | போகத்தை (எ-று) |
| மற்ற—அன்று | ... | ஏ-அசைநிலை |

(இதன்றாற்பரியம்)

படுகுழியில் பெண்ணானையை நிறுத்திப்பாகர்

மறைந்திருக்க வதனை பரிசசுகத்தாலாண்யானை யானது போய்தழுவ வப்பாகராற்பிடிக்கப்பட்டு வருந்துத்தவதாற் பரிசசுகத்தால் பெண்போகத்தை யிச்சிக்கிற் காமவிகாரத்தா லலக்கண்வருமென்று அஃதைநீக்கினனென்பதாம் ௰சு

(அவதாரிகை)

(ரூபேந்திரியத்தாற்கேடடைந்தவிட்டிற்)
(பறவையாலறிந்ததிதுவெனல்)

ஒளிகொளும் விளக்கினழலுருக்கண்டீதுணவு கொலெனவதிற்சுழன்று, விளிவுறும்பசிய பதங்கமுங்கண்டு வெய்பதித்தொழிலெனக்கருதித், தெளிவுகொண்முனிவராயினுங்காணிற் சிந்தைகொண்டனுதினமருந்தக், களிகொளுங்கருங்கண்மடந்தைபருருவங்கருத்தொடுங்காண்கிலனம்மா

(இதன்பொருள்)

| | |
|---|---|
| ஒளிகொளும் விளக்கின் | பிரகாசத்தை கொண்டிருக்கும் விளக்கினது |
| அழலுருக்கண்டு | ... சிவந்த வடிவத்தைக்கண்டு [று |
| ஈதுணவுகொலென | ... இதுதனக்காகாரமென் |
| அதிற்சுழன்று | ... அவ்விளக்கிற் சுழன்று விழுந்து |
| விளிவுறும் | ... இறந்துபோகின்ற |

| | |
|---|---|
| பசியபதங்கமும் | ... பசியவிட்டிற் பறவையையும் |
| கண்டு | ... நோக்கி |
| தெளிவுகொள் | ... அறிவுடைய |
| முனிவராயினும் | ... பெரியோர்களானும் |
| கருங்கண் | ... மையணிந்த கண்ணினையுடைய |
| மடந்தையர் | ... மாதர்களது |
| உருவம் | ... வடிவத்தை |
| காணில் | ... பார்க்கில் |
| சிந்தைகொண்டு | ... அவ்வுருவினைச் சிந்தையிற்கொண்டு |
| அனுதினம் | ... எப்போதும் [ள்ள |
| அருந்த | ... அவ்வின்பத்தைக்கொ |
| களிகொளும் | ... மயக்கங் கொள்ளுமாதலின் |
| வெய்யதித்தொழிலெனக் | இச்செய்கை கொடிய |
| கருதி | ... தென்றுநினைத்து |
| கருத்தொடும் | ... மனத்தினுலேனும் |
| காண்கிலன் | ... நினையேன் (எ-று) |

ஈண்டு-அம்மவென்பதுவாயசைச்சொல்.

(இதன் ரூற்பரியம்.)

சட்சிந்திரியததினுல் விட்டிற்பறவை யானது விளக்கினொளியையுணவெனக்கருதி யிறந்தமை,

நோக்கிமாதருமவ்விளக்கின்றன் மையராத, வினி வராற்கேடுறுமென நீக்கின னென்பதாம். (டீள)

(அவதாரிகை)

(சிங்ஙுவிந்திரியத்தாற்கேடுற்றமீனு)

(லறிந்ததிதுவெனல்.)

வஞ்சநெஞ்சினராய்த்தூண்டிலின் வளைந்தவ ண்சுவையூன் பெறவடைந்து, துஞ்சுதலடைந்த மீன்குழுக்கண்டு துன்னுமைவகையெனும்வாயுப், பஞ்சரமென்றுற்றுடலூறை வதற்காப்பசிக்கனற ணிப்பதற்கன்றி, யஞ்சுவை யிவையென்ருசையி னிணேந்தேயருந்துத லொழிந்தனனடிசில்.

(இதன்பொருள்.)

| | | |
|---|---|---|
| வஞ்சநெஞ்சினராய் | ... | கொடியமனத்தையுடையராகி |
| வளைந்த தூண்டிலின் | ... | வளைவுகொண்ட தூண்டின் முள்ளிற் பொருந்திய |
| வண்சுவையூன் | ... | மிக்க சுவையினே யுடைய வூனை |
| பெறவடைந்து | ... | தானுண்ணவந்து |
| துஞ்சுதலடைந்த | ... | இறந்துபோகின்ற |
| மீன்குழுக்கண்டு | ... | மீன்கூட்டங்களைப்பார்த்து |
| துன்னும் | ... | நெருங்கிய |

| | |
|---|---|
| ஐவகையெனும்வாயு | ... ஐந்து வகைப்பட்டபஞ்ச பிராணவாயுக்களும் |
| பஞ்சரமென்றுற்று | ... கூடென்றடைந்து |
| உடல் | ... இவ்வுடலினிடத்து |
| உறைவதற்கா | ... இருப்பதறகாக |
| பசிக்கனல் | ... உதராக்கினியை |
| தணிப்பதற்கன்றி | ... ஆற்றுதற்கல்லால் |
| அடிசில் | ... ஆகாரத்தை |
| அஞ்சுவையிவையென்று | இவையினிமை யென்று |
| ஆசையினினைந்து | ... அன்போடு நினைவுற்று |
| அருந்துதலொழித்த | ... புசிக்கின்றதை நீக்கி |
| னன் | ... னன் |

(இதன்ருற்பரியம்.)

மீன்பிடிப்போர் தூண்டின்முள்ளிற்றசையைக் கோத்துப், போடவதனையாகாரமெனக்கருதி மீன் கூட்டங்களிறக்கின்றதைப் பாத்து- வாயுவிவ்வுடலிற்றங்கும் பொருட்டு தராக்கினி தணிப்பதற்குக்கிடைத்ததைப் புசிப்பதன்றி நாவுக்கினிமை தேடாதொழித்தன னென்பதாம். (௰அ)

அவதாரிகை. இதுவுமது.

(வண்டினங்களாலறிகின்றவை யிவையெனல்)

வண்டினஞ்சிறிது சிறிதெனவலருமலர் தொறும்வருமுருகுவப்பா. லுண்டனதிரிதல் கண்ட

னன் யானுமுரைக்கிலித் தொழிலழகென்னே.
வெண்டரு நகரின்மனை தொறுங்குறுகி யென
தொருகரமிசையையங், கொண்டனன் சிறிது
சிறிதென வுவந்து கொள்கலத் தேற்றிடாதன்றே.

| | |
|---|---|
| வண்டினம் | ... வண்டினங்கள் |
| சிறிதுசிறிதென | ... கொஞ்சங்கொஞ்சமாக |
| அலருமலர்தொறும் | ... அலருகின்ற புஷ்பங்கடோறும் |
| வருமுருகு | ... ஒழுகுகின்றதேனை |
| உவப்பால் | ... மகிழ்ச்சியோடும் |
| உண்டனதிரிதல் | ... புசித்துத்திரிகின்றதை |
| கண்டனன் | ... பார்த்தனன் |
| யானும் | ... நானும் |
| உரைக்கில் | ... இதனைச்சொல்லுமிடத்து |
| இத்தொழிலழகென்ன... | இவ்வண்டின் செய்கைநன்றென்று |
| எண்டருநகரின் | ... அநேக நகரங்களில்விளங்குகின்ற |
| மனைதொறுங்குறுகி | ... வீடுகடோறுஞ்சென்று |
| கொள்கலத்தேற்றிடாது. | பிக்ஷாபாத்திரத்தில் வாங்காது |
| ஐயம் | ... பிக்ஷையை |
| எனதொருகரமிசை | ... எனதொரு கரத்திலேயேவாங்கி |

சிறிதுசிறிதென ... சிறிதுசிறிதாக
உவந்துகொண்டனன் ... மகிட்சியுடன் புசிக்கின்றேன் (எ-று)

அன்று-ஏ-அசை

(இதன்றாற்பரியம்)

வண்டானது மலர்களிலிருக்குந்தேனை சிறிது சிறிதாக வுண்டுகளித்துத்திரிகின்றதுபோலத் தானும் வீடுகடோறுங் கரபாத்திரப் பிட்சை கிடைத்ததை யுண்டு மகிட்சியாய் திரிகின்றனனென்பதாம். (௰௩)

(அவதாரிகை.)

கந்தேந்திரியத்தாற் கேடடைந்த சுரும்பினை லறிந்த திறனைத்தெனல்.

ஒருமரை மலரையுவந்து மென்முருகுண்டுறை தருமொரு சுரும்பிரவில் விரியிதழ் குவிய மலரகப்பட்டு விளிந்தது கண்டொரு நாளுங்கருதியநகரி லொருமனை யுறைந்து கவின்பெறு முணவுவந்துந்தேன், மருமலர் மகுட கோடிகளிடறு மலர்புரை தருபத யுகத்தோய்.

[இதன்பொருள்.]

மருமலர்மகுடகோடிகள் வாசமுள்ள வெத்திமாலையைப் பொருந்திய வநேக கிரீடங்களை

| | |
|---|---|
| இடறும் ... | இடறுகின்ற |
| மலர்புரை தருபதயுகத் | தாமரைபோன்ற பதங்க |
| தோய் ... | ளையுடைய எதுமகாரா ஜனே [ரும்பி |
| ஒருமறை மலரையுவந்து | ஒருதாமரைமலரினை வி |
| மென்முருகுண்டு ... | மிருதுவான வாசனை யைக் கிறிகித்துக்கொ ண்டு [னது |
| உறைதருமொருசுரும்பு. | இருக்குமோர் வண்டா |
| இரவில்விரியிதழ்குவிய... | இரவில் விரிந்தவிதழ்கு விந்தவுடனே |
| மலரகப்பட்டு ... | அம்மலரினுளகப்பட்டு |
| விளிந்துகண்டு ... | இறந்து போயினதைபா ர்த்து |
| ஒருநாளும் ... | ஓர்நாளிலேயும் |
| கருதியநகரில் ... | நினைத்தவூர்களிலிருக்கி ன்ற |
| ஒருமனை ... | ஓரில்லிடத்திலேனும் |
| உறைந்து ... | இருந்துகொண்டு |
| உணவருந்தேன் ... | புசிப்பைக்கொள் ளேன் (எ-று) |

[இதன் குறிப்பரியம்]

ஒருவண்டானது வாசனையைவிரும்பி உதய முதல் தாமரைப்பூவிலிருக்க அத்தமானத்திலம்ம

லர்குவிய வதிலகப்பட்டிறந்ததை நோக்கி யானும் ஓரூரிலே யொருமனையிலாவது நிலையுற்றிராமல் வாயலில் நின்றபடி கிடைத்தபுசிப்பை யருந்தித் திரிகின்றன னென்பதாம் (உ௰)

(அவதாரிகை)

சத்தாதிமுதலிய குணங்களுளொவ்வொன்றினூற் கேடுற்றுயிர்களிறக்குமாயினவ்வைந்து மோரிடத்துச் சேருமாயினெவ்வாறுய்வதெனவியந்துரைத்தல்.

(வேறு)

முந்தமேயொலியாதியிலொருகுண முன்னிப், பந்தமோடிடறுற்றிறந்தனபலவென்று லைந்துசேர் குணங்களு மொருங்காசையி னடைந்தோருந்து போநெறியுண்டுகொ லோமதித்துரைக்கில்.

இதன்பொருள்

| | |
|---|---|
| முந்தமே | ... முன்புகூறிய |
| ஒலியாதியில் | ... சத்த பரிச ரூப ரச கந்தமாகியவிவ்வைந்துகுணங்களில் |
| ஒருகுணமுன்னி | ... ஒருகுணத்தைநினைத்து |
| பந்தமோடு | ... இணைத்துடனே [ள் |
| இடறுற்றிறந்தன | ... துன்பமுற்றழிந்தவைக |
| பலவென்றால் | ... அநேகமென்றால் |

